# குமரிகண்டத்தில் மறைக்கப்பட்ட தொல் தமிழ் இனத்தின் பூர்வகுடி மருதநில மள்ளர் வரலாற்றுப் பதிவுகள்

*முனைவர்: மு.கலியாணிகுமார்*
வரலாறு மற்றும் நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்
SENIOR FELLOW CCRT–NEW DELHI, கிழத் தெரு
பண்டாரம் பட்டி, தூத்துக்குடி, தமிழ்நாடு, இந்தியா-628002.

**மலர்: 4**

**இதழ்: 2**

**மாதம்: அக்டோபர்**

**வருடம்: 2019**

**ISSN: 2454-3993**

**முகம்**

தமிழர் பண்டைய நாகரீகத்தின் தொல்பழந் தமிழர்கள் மள்ளர் இனமான தேவேந்திரகுல வேளாளர்கள் ஆவர். அவர்களே இந்த நாட்டின் மண்ணின் மைந்தர்கள். மள்ளரின் சுவடுகள் துணைக் கண்டத்துக்கு அப்பாலும் காணப்படுகிறது இலங்கை, இந்தோனிசியா, தாய்லாந்து சிங்கப்பூர், மலேசியா, எகிப்து, பகுதியில் தொல்பழ நினைவுகள் புராண இலக்கியங்கள், இனமொழி சமயப் பண்பாட் சான்றுகள் மள்ளர்களின் மறுபதிப்பு என்று எண்ணக்கூடிய சொற்கள் ஒன்று போல் காணமுடிகிறது. தென்கிழக்கு ஆசியாவில் 41 வகையான தமிழ் சொற்கள் மக்கள் பேசு மொழியில் உள்ளது.

சங்க இலக்கியங்கள் சொல்லும் கி.மு 500 ஆண்டுகளுக்கு முன் மள்ளர்களின் வாழ்வில் எச்சங்கள் எந்த மக்களிடம் இருக்கிறதோ அவர்கள் தான் தொல் பழந்தமிழர்களான மள்ளர் இனம். தமிழர் பண்டைய நாகரீகத்தின் நில இயல் அடிப்படையில் தேவேந்திர வேளாளர்கள் தனது முதல் நாகரீகத்தை முல்லைக்கும் நெய்தலுக்கும் இடைப்பட்ட தாழ்வான சமவெளியாம் மள்ளர் நிலமாம் மருதம் நிலமே தேவேந்திரகுல வேளாளர் இனமக்கள் இறுதியாக கூடிவாழத் தொடங்கிய நிலப்பகுதியாம். மள்ளர் இன சமுதாய வரலாற்றை ஆய்ந்தறிய இலக்கிய அடிப்படையில் மட்டுமல்லாமல் வரலாறு, தொல்லியல், நாட்டார் வழக்காறுகள் மானிடவியல், சமுகவியல் அடிப்படையில் ஆய்வு செய்ய வேண்டிய தேவை உணரப்பட்டன.

**மள்ளர் இனத்தோற்றம்**

ஆதாம் என்ற சொல்லை எடுத்து அதனை ஆதி என மாற்றி அச்சொலுக்கு மூலம் மனித தோற்றத்திற்கும் தன் இனத்திற்கும் மூலம் இவர்கள் என்ற முறையில் கிருதர்கள் (மருது நில மள்ளர்கள் ஆதிக்குடிகள் அதாவது மூலமக்கள் என்று அழைத்து கொண்டதை பார்க்கலாம் (கிருதர்) மள்ளர்கள் வாழ்ந்த நாடு ஆதிநாடு என்றும் இவர்கள் வழிபாடு தான் ஏக தெய்வ வழிபாடாகும்.

தென்னாடுடைய சிவனே போற்றி என்ற ஆன்மிக சொல்லாட்சி இந்த ஏக தெய்வ வழிபாட்டைக்குறிக்கிறது.

**குறிப்பு**

தென்மாவட்டத்தில் தேவேந்திர வேளாளர் இனத்தின் வீரநாட்டார் பிரிவில் "ஆதி": என்ற பெயர் பலருக்கு இருப்பதை காணமுடிகிறது.

தெய்வீக வகுப்பாரான இவர்கள் தேவ குடுக்கா என்பது பிற்காலத்தில் குடும்பமார் என்று மறுவி உள்ளது. தெய்வகுடிகள் என்பது தேவேந்திர குடும்பமார் என்பதன் பொருளாகும். இந்த பொருளிலிருந்து தோன்றியது தான் கிரந்தம் என்றும் இதிலிருந்து உருவான மொழி கிருந்தம் மொழிஎன்றும் ஆரியர் மொழியான சதம் என்றழைக்கப்படும் மொழி இதன் கிளைமொழியாகும்.

**மள்ளர் வரலாறு**

தமிழகத்தின் வரலாற்றுகாலம் கி.மு 300ல் தொடங்குகிறது. தென் இந்தியாவில் மனித இனம் 3 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றியது. இவற்றிக்கு இடைப்பட்ட காலம் வரலாற்றுக்கு முற்பட்ட காலமாகும். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றிய மூத்த குடி என்ற சொல்லாட்சி மென்புல வாழ்க்கைகளையும் எதிர்பட்ட இடையூறுகளை சமாளித்த வீர உணர்வையும் சுட்டி காட்டுகின்ற மருதநில மள்ளர்களைதான் எடுத்து காட்டுகிறது.

தமிழர்கள் கீழோக நாடு மள்ளர்வாழும் நாடு என்றும் இத்தகைய தென்புல கடல்வாழ் மள்ளர்கள் கிருடர் இவர்கள் பிற்காலத்தில் திராவிடர் என்றும் தமிழர் என்று அழைத்தனர்.

இவர்களை கோண்டுக்கள் என்றும் இவர்கள் முக்கிய இனமாக கருதப்பட்டனர். இயற்கை வழிபாடு பௌத்த சமயத்தின் தடயங்களை இன்றும் இவர்களிடம் எச்சங்களாக காணமுடிகிறது. மள்ளர்களை பெரிய தெய்வம், தெய்வகுடிகள், தெய்வ இல்லம் என்று பொருள்படுபவை. பல்லவ மள்ளர்களின் கல்வெட்டுகளில் கடல் கொண்ட நாடான இதை தக்காணம் என்றும் கடல் கொண்ட நாடுகள் தாழ்வாகவும் இருந்துள்ளதாக வரலாற்று சான்றுகள் தெரிவிக்கிறது.

**எல்லாம் நாடு**

மள்ளர்கள் தொன்மையில் வ ா ழ் ந் த நாட்டை எல்லம் அல்லது ஏலம் என அழைத்தனர். அதையொட்டி தங்களை எல்லர்கள் (மள்ளர்கள்) என்றும் தாங்கள் வணங்கிய தெய்வம் எல்லை காத்தான். அதை எல்லை காக்கும் அம்மன் எல்லம்மன் என்று அழைத்தக்கொண்டனர். மள்ளர்கள் வீரநாட்டார் என்ற பட்டத்துடன் வாழ்கின்றனர். மதுரையை பாண்டிய மன்னன் ஆட்சி செய்தார். அன்று மதுரையை எல்மதுரை அதாவது மள்ளர் ஆண்ட மதுரை என்று அழைக்கின்றனர்.

**குறிப்பு**

(மதுரை அருகில் சாத்தான்குடி என்ற கிராமத்தில் சாத்தான் என்ற மள்ளர் இனம் வாழ்ந்த இடம் இங்கு சிவன், பெருமாள் கருப்பசாமி கோயில் உள்ளது. கருப்பசாமியை இப்பொழுது கள்ளர், அகம்பனுடயர் வழிபடுகின்றனர். கோயில் முதல் மரியாதை பூசை செய்தல் அனைத்தும் தேவேந்திரகுலத் மக்களே இன்றும் செய்து வருகின்றனர்.

**நாட்டார்**

மள்ளர்களுக்கு நாட்டார் பட்டம் உள்ளது கிருடர் என்பது கிரு + இடர் என்ற சொற்களால் ஆனது கிருடர்களை கருநாட்டார், பெருநாட்டார், பள்ளநாட்டார் என்று

தங்களை திறன் அடிப்படையிலும், நிற அடிப்படையிலும் நாட்டில் வாழ்ந்தனர் இவர்களே பாண்டிய , சோழ, சேர பல்லவ வம்சத்தினர் ஆவார்கள்.

## தென்புலத்தில் ஆட்சிசெய்தல்

மள்ளர் இனம் கிமு.4ம் நூற்றாண்டில் தமிழ்பகுதியில் ஆட்சிசெய்தனர் இவர்கள் சத்திரவம்சத்தை சார்ந்தவர்கள் என்றும் வரலாற்று சிறப்புமிக்க இந்த வம்சத்தை அன்று மள்ளர் என்றும் பெருமாள் என்ற பெயராலும் அழைத்தனர்.

திவாகர நிகண்டில் மள்ளர் என்பதற்கு அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்களுக்கும் மள்ளர் எனும் பெயர் பின்கல நிகண்டில் பெரிய மலைவீரரும் மருதநில மக்களும் (பெரிய நாட்டார் அல்லது வீரநாட்டார்) என்று பொருள்படும். சூடாமணி நிகண்டு மள்ளர் என்பதற்கு வயவன், திறளோன் வீரம் என்று சங்க நிகண்டு குறிப்பிடுகிறது. மள்ளர் இனத்தின் முதல் மௌரிய அரசர் சாளுக்கிய பல்லவ மள்ளர் இன அரசர்கள் பாண்டியன், சேரன், சோழன், மூவேந்தர்களுடன் தனிப்பட்ட முறையில் ஆட்சி செய்து வந்தனர். பாண்டியர் (மதுரை) சோழர் (திருச்சி) சேரர்கள் (கேரளபகுதி) இவர்களுடைய ஆட்சி கிமு. 4ம் நற்றாண்டில் உள்ள வரலாற்று சான்றுகளின் படி (கி.மு 325-188) வரை சான்றுகள் கிடைத்தன. (கி.மு250) வரலாற்றுசான்றுகள்படி தென்இந்தியாவில் பாண்டியர்,சோழர், சேரர் மூவேந்தர்கள் தமிழைத் தாய்மொழியாக கொண்டு ஆட்சி அவை நடத்தினர். மூவேந்தர் மள்ளர்களே விவசாயத்தையும், பக்தி இலக்கியத்தையும் தோற்றுவித்தனர். மள்ளர் இனம் முதல் முதலில் புத்த மதத்தினை பின்பற்றி வந்தவர்கள். உலகின் மிகப்பெரிய இந்துக்கோயில் கம்போடியா அங்கோவாட் கோயில் முதல் தஞ்சை பெரிய கோயிலை கட்டியவர்களும் தமிழ் இனமள்ளர்கள். சாணக்கிய வம்சம் தரும் ஆதாரங்களை வைத்து பார்க்கும் வகையில், பெருமாள் என்ற வார்த்தை மள்ளர் இனத்தில் தோன்றிய சேரன் பாண்டியன், சோழன், பல்லவன் ஆகியோருக்கு இருந்தது என்பது தெரியவருகிறது. இவர்கள் ஆட்சி 12 நாடுகளில் இருந்தது. மள்ளர்கள் கிழக்கு பகுதிகளை இரண்டாக கி.பி 5வது நூற்றாண்டில் பிரித்தனர். பல்லவமள்ளர் வெங்கி பகுதிகளை கிருஷ்ணமள்ளர் தேவகிரி பகுதியையும் ஆட்சி செய்தனர். பல்லவமள்ளர் சிலர் காஞ்சி யையும் பாண்டிய மள்ளர் மதுரையும் சோழமள்ளர் தஞ்சையையும் சேரமள்ளர் (பெருமாள்) கேரள பகுதியும் ஆட்சி செய்தனர்.

## பெருமாள் வரலாறு

மள்ளர்கள் “பெருமாள்” என்ற தெய்வ வார்த்தையால் அழைக்கப்பட்டனர். இவர்கள் மள்ளர் என்றும் பெரிய நாட்டார் என்றும் அழைத்தனர்.

## குறிப்பு

தூத்துக்குடி மாவட்டத்தில் தேவேந்திர வேளாளர் சமூகத்தில் வீரநாட்டார் என்ற பிரிவில் உள்ளவர்கள் வாழும் ஊர்களில் பெருமாள் வழிபாடு இன்றும் நடைபெறுகிறது. இதனை பெருமாள் பூஜை என்று அழைக்கின்றனர். மள்ளர்கள் தான் முதன் முதலில் தென்னை, பலாமரம், மாமரம், வாழை, கரும்பு, ஆகியவை உற்பத்தி செய்தனர். புழி தேவி 18 வகையான நிலங்களையும் 17 நாடுகளையும் பெருமாளுக்கு கொடுத்தார்.

1. கீயப் பெருமாள் - (மலை நாடுஅரசன்)
2. சோழப் பெருமாள் - (64 கிராமங்களை உள் அடக்கிய அள்ளூர், தலையுர் ஆட்சி செய்தல்)
3. குலசேகரப் பெருமாள் - கேரளப்குதியை ஆட்சி செய்தல்.

இவர்களை தொடர்ந்து இந்திரப்பெருமாள், ஆரியப்பெருமாள், குண்டன்பெருமாள், கோட்டைப் பெருமாள், மாடபெருமாள், எரிப்பெருமாள், கொம்பன் பெருமாள், விஜயன் பெருமாள், வல்லவப் பெருமாள், ஹரிசந்திரப் பெருமாள், மல்லர் பெருமாள், இத்தனை மள்ளர்களுலம் அரசாட்சி செய்தனர். இவர்களே இன்றைய நாட்டார் தெங்வங்களாக மள்ளர்கள் வழிபாடு செய்கின்றனர்.

மள்ளர்கள் உலகின் மொத்தம் 6 கோடியே 12 லட்சம் வரை வாழ்ந்துள்ளனர். என்றும் இவர்கள் மொழி வேறுப்பட்டால் பிரிந்து வாழ்ந்துள்ளனர். இவர்கள் ஆட்சி செய்த பகுதியில் வேற்று இனத்தவர்கள் படையெடுப்பால் பிரிந்து சென்ற வகையில் இன்றைய நிலவரப்படி தேவேந்திரகுல மள்ளர்கள் 2 கோடியே இரண்டு லட்சம் பேர் வாழ்ந்து வருகிள்றனர். தமிழகத்தில் 1 கோடி தேவேந்திரர்கள் வாழ்ந்து வருகின்றனர். வரலாற்று நிலவியல் முறையில் கிமு. 300 முதல் கி.பி 600 வரை அசோகர் காலத்தில் தமிழ் பகுதியானது பெரிய பகுதியாக இருந்தது. 1178-1216ல் தமிழகத்தில் இடங்கை, வலங்கை என்ற பிரிவுகள் இருந்தது. இடங்கை இனத்து மக்கள் (அக்கினி) வகையை சார்ந்தவர்கள்) இதில் மள்ளர்கள் இடங்கை வகை சார்ந்தவர்கள் ஆவார்கள்.17ம் மற்றும் 18ம் நூற்றாண்டில் திருவள்ளுவரால் திருக்குறள் இயற்றப்ப்ட்டது. இவரும் வள்ளுவர் இனத்தில் தோன்றி இவர் வம்சத்ததினர் குதேவேந்திரல மக்களுக்கு ஜாதக கணிப்பு குறித்து கொடுத்தார்.அவர்களுடைய குறிப்புகளிலும் நிலவுடமை உள்ளவராக வாழ்ந்தவர்கள் 13ஆம் நூற்றாண்டில் நாடு நிலம், இடம், செல்வம், இழந்து அடிமையாக்கப்பட்டனர்.

### ஈழநாட்டில் மள்ளர்கள்

இலங்கையில் யாழ்பாணத்தில் 9 சதவித தேவேந்திரகுல வேளாளர்கள் வாழ்கின்றன். இவர்கள் இரண்டுபிரிவாக வாழ்கின்றனர். இந்திய தமிழ் தேவேந்திரர்கள் என்றும் தெற்கத்திய தேவேந்திரர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர்.1834-ல் சைமன் காசிசெட்டி என்வர் தாம் வெளியிட்ட the caste customs manners and literature of the tamils எனும் நூலில் யாழ்பாணத்தில் 65க்கும் மேற்பட்ட இலங்கை சாதிபெயர்களை குறிப்பிட்டுள்ளார். சமூக அதிகார நிலையியைப் பொறுத்தமட்டில் யாழ்பாணத்த சாதிக்குடிகளை இரண்டாகப் பிரித்துள்ளனர். 1. உயர் சாதியினர் 2. குடிமக்கள் என்பது 1658-1796 காலத்தில் ஒல்லாந்தர் காலத்தில் பிரிக்கப்பட்டது.

குடிமக்கள் என்று அழைக்கப்படும் தேவேந்திரகுல வேளாளர்கள் பூர்விக குடிமக்கள் ஆவர். இவர்கள் பிரிவில் கோவியர், நளவர் இவர்களுடன் இருக்கிறனர். 1796 பிறகு தான் நிலம், செல்வம், பொருள் ஆகியவற்றை இழந்து அடிமையாக்கப்பட்டனர், வன்னிகாட்டு பகுதியைத் திருத்தி வயல்பகுதியாக மாற்றியதில் இவர்களுக்குப் பெரும் பங்கு உண்டு இதனால் (வன்னியர்) என்ற பட்டமும் இவ்ாகளுக்கு வழங்கப்பட்டது. தமிழகத்தின் தென்பகுதியில் வன்னிய நாட்டார் என்ற குடும்பப்பட்ட பெயர் தேவேந்திர குர வேளாளருக்கு இருப்பதை காணமுடியும்

### தேவேந்திரர்கள் பிரிவுகள்

இலங்கை தமிழர்பகுதியில் தேவேந்திர பள்ளன் என்றும் தெற்கத்திய பள்ளன் என்ற அழைக்கப்படுகின்றனர். இரண்டு பிரிவினரும் மலையோர பகுதியிலும் வயல்சார்ந்த பகுதியிலும் வேலை செய்கின்றனர். 1905 முதல் 1909 வரை தமிழகப்பகுதியான,திருச்சி.மதுரை.தஞ்சாவூர்

சேலம், திருநெல்வேலி, இராமநாதபுரம் பகுதியிலிருந்து 28,596 தேவேந்திர குல வேளாளர்கள் யாழ்பாணத்திற்கு அழைத்து செல்லப்பட்டனர். 1930 ஆண்டு கணக்குப்படி அங்குள்ள தேவேந்திர குல வேளாளர்கள் 9 % பேர் இலங்கை தேவேந்திரகுல வேளாளர்கள் ஆவார்கள். இவர்களுடைய சொத்துகள், நிலங்கள், இடங்கள் உள்ளூர் தமிழர், சிங்களர் மூலம் கொள்ளை அடிக்கப்பட்டதால் இவர்கள் முதல் முதலில் கொழும்பு சென்று வேலை செய்து வந்தனர். மூன்று தலைமுறையாக யாழ்பாணத்தில்வாழ்ந்து வருகின்றனர். தமிழ்நாட்டு தேவேந்திரர்கள் கண்டி, மாத்தளை, நியுரோலியா, பாடுவா, ரத்தனபுரி, படலா பகுதியில் தோட்ட தொழிலாளர்களாகவும், தோட்ட உரிமையாளராகவும், கண்காணியாகவும், தொழில் செய்து வருகின்றனர். யாழ்ப்பாண தேவேந்திரர்கள் வல்வட்டிதுறை, முல்லை தீவு, தோப்புகாடு, வன்னிபகுதியில் முதன்மையுடையவராக வாழ்கின்றனர். இம்மக்களைப்பற்றி ஆய்வு செய்த அறிஞர்கள் இவர் வீரமிக்கவராகவும் நல்ல உழைப்பாளியாகவும், கலை உணர்வுடன் வாழ்கின்றனர். தமிழ் ஈழ போரட்டத்தில் முதன்மை உடையவராக உயிர்தியாகம் செய்வது தேவேந்திரகுல மக்களுக்கு பெருமை தருகிறது.

தமிழகத்திலிருந்து அழைத்து செல்லப்பட்ட வெள்ளார்களே தேவேந்திரகுல மக்களின் செல்வத்தை பெற்று வசதியாக வாழ்கின்றனர். இது தொடர்பான வழக்காற்று கதையில் தேவேந்திரர்கள் வெள்ளாருக்கு மூத்தவர் என்றும் இவர்களுடைய செல்வத்தை பிடிங்கி இவர்களைப் பள்ளத்தில் வாழ விட்டதால் பள்ளர் என்று அழைக்கப்பட்டனர். இதனால் நல்லதங்காள்கதை போல வெள்ளார் மனைவியை மூளிஅலங்காரி என்று அழைக்கின்றனர். மேலும் வன்னிய பெண்ணைக் காத்து அவளுக்குப்பிறந்த குழந்தைகள் தான் (நலவர், என்ற இனம் ஆகவே அந்த பெண்ணின் வகையார் தேவேந்திரகுல வேளாளரை அண்ணன்மார் சாமி என்று வழிபடும் பழக்கம் இருப்பதும். களப்பணியில் தெரியவருகிறது என்பதை ஆய்வாளர் தெரிவிக்கிறார். தற்பொழுது ஒரு சிலர் இடம் புலர்ந்து கனடா, ஜெர்மன், லண்டன், மலேசியா, அரபுநாடுகளில் வேலை செய்து வருகின்றனர்.

## முடிவுரை

மள்ளர்களைப் பற்றி முழுமையான ஆய்வு இன்னும் மேற்கொள்ளாத நிலையில்

இம்மக்களின் வலராறுகள், வழக்காறுகள் மறைக்கப்பட்டுள்ளது. இதனை வெளி உலகத்திற்கு கொண்டு வரும் வகையில் உலகின் பல பகுதியில் வாழும் தமிழ் அமைப்புகள் ஒன்றினை வரலாற்று ஆவணங்கள் சேகரிக்கும் வகையில் ஆய்வு மேற்கொண்டால் முழுமையான பூர்விக தமிழ் மள்ளர் இன மக்களின் வரலாறு கிடைக்கும்.

## துணை நூல்கள்

1. முனைவர் கார்த்திகேசு “சிவத்தம்பி ஈழத்தில் தமிழ் இலக்கியம்” யாழ்பாணப் பல்கழைக்கழகம், ஸ்ரீலங்கா,
2. புலவர் கா.கோவிந்தன் பி.பி சீனிவாச அய்யங்காரின் தழிழர் வரலாறு 1865 கழக வெளியீடு சென்னை
3. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் தமிழகம் பிற பாண்பாடும் 1973 நியூ செஞ்சுரி பக் ஹவுஸ் சென்னை
4. தே.ஞானசேகரன் மள்ளர். சமூக வரலாறு 2001 தமிழப்பண்பாட்டு ஆய்வு நிறுவனம்,

5. முனைவர் கோ.கேசவன் பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை 1991 அன்னம் புத்தகம் மையம், மதுரை
6. ஞானி தமிழன் வாழ்வும் வரலாறும் 1999 நிகழ் கோவை.
7. முனைவர் க.கைலாசபதி பண்மைத் தமிழர் வாழ்வும் வழிபாடும் 1991 நியு செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை.
8. முனைவர்.குருசாமிசித்தர் முனைவர் தே.ஞானசேகரன், தமிழர் பண்பாட்டு வரலாறு 1999 பண்ணாட்டு ஆய்வு மன்றம் கோவை.
9. ஆரா.தேவ. ஆசீர்வாதம் மூவேந்தர் யார்.
10. முனைவர் குருசாமி சித்தர் தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திரகுல வேளாளர் -1993 கோவை
11. N.Subramanian, History of Tamil land to A.D.1565- koodal Publishers 1972, Madurai
12. Bronstein, Pesant State and Society in medical south india oxford press 1980 Delhi.
13. Bryan Pfaffen Berger, Caste in tamil culture the religious foundation of sudra domination in tmail sri-lanka 1979 vikas publisher hase private ltd.
14. G.S Ghurye, Caste and race in india 1932
15. R.jayaraman, Caste continuities in Ceylon 1963